உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சதந்திரம்.

இது

வித்வான் - தாண்டவராய முதலியாரவர்கள்

இயற்றியது.

சென்னை கிறிஸ்டியன் காலேஜ்

தமிழ்த் தலைமைப் பண்டிதர்

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள், பி. ஏ.

பார்வையிட்டது.

புதுப்பதிப்பு

சென்னை

தாம்ஸன் கம்பெனியாரால்

மினேர்வா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

விலை அணா - 4

# பொருளடக்கம்.

# முகவுரை.

**பஞ்சதந்திரம்** என்பது உதாரணமுகத்தால் உலகியனெறியும் உயர்ந்தநீதியும் உணர்த்தி மக்கட்கு உறுதிபயப்பதொரு நூலாம். இஃதினிய செந்தமிழ் வசன நன்னடையி லெழுதப்பட்டு யாவரானும் நன்குமதிக்கப்பட்டு விளங்குகின்றது. இவ்வசனநூல் ஆதியில் வெளிப்படுமுன்னரே வீரமார்த்தாண்ட தேவனென்னு மொருபுலவரால் செய்யப்பட்டுச் செய்யுள் ரூபமாயுள்ள பஞ்சதந்திரமொன்றுளது. அது மிகவுமெளியநடையி லெழுதப்பட்டிருப்பவும் அதனைப் பயில்வார் தொகை நாடோறுஞ் சுருங்குதல்கண்டும், ஆங்கிலம் முதலிய பிறபாஷைகளில் வசனநடையாற் பெரும்பயன்கள் விளைதல்கண்டும், பஞ்சதந்திரத்தைத் தாமும் வசனநடையில் வரையின் தந்நாட்டினரும் அதனைப் பெரிதும் பயிறலைத் தலைப்பட்டு நற்பெரும்பயன்களை நாளும் நண்ணுவரெனவோர்ந்து நடைபடித்து **வித்துவான் தாண்டவராய முதலியாரவர்கள்** இயற்றியதாம் இவ்வுரைநடைப் பனுவல். இந்நூலாசிரியர் தொண்டைமண்டலத்திற் புதுவைமா நகரையடுத்த சூளைமேட்டைச் சார்ந்த விலலியப்பாக்கம் என்ற **வில்லிநல்லூரில்** வேளாளர்குலத்திற் சித்தாந்தசைவமரபிற் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்த கந்தசாமி முதலியார்தம் அருந்தவத்துதித்த கனிட்டகுமாரர். இவர் தமையனார் முனியப்பமுதலியார் என்போர். இவர் தமக்குமிக்க இளமைப்பருவத்திலேயே தமது தந்தையாரையிழக்குந் தௌர்ப்பாக்கியஞ் சம்பவித்தமையாற் பொன்விளைந்த

களத்தூர்சென்று ஆண்டிருந்த தமது அம்மான் குமாரசாமி உபாத்தியாயருடைய மேற்பார்வையிற்றங்கி, அவர்தம்பா லெழுத்தப்படிக்கக் கற்றுக்கொண்டனர். அதன்பின்னர்த் தமிழ்க்கல்வியின்மீது தமக்குள்ள ஆர்வம் அதிகரிக்கவே, நமது நூலாசிரியர் அந்தகக்கவி வீரராகவ முதலியாரது நர்ன்காம வமிசத்தினராய உழலூர் - வேலப்பதேசிகரிடம் இலக்கண விலக்கியம் பயின்றனர். இனி அத்துணையோடு நின்றுவிடா மற் கல்விகிரயப்புதற்பொருட்டுச் சென்னைமாநகருச்சென்று, சிந்தாதிரிப்பேட்டையிற் போந்திருந்த புதுவை - விசுவநாத பிள்ளையிடத்தும் கூனிமேடு - வித்துவான் இராமாநுச முதலியாரிடத்துஞ் செந்தமிழிலக்கியங்களை மேன்மேலும் பயின்று, அக்காலத்துத் தொல்காப்பியம் வரதப்ப முதலியாரெனச் சிறப்புப்பெயர்பெற்றுத் திகழாநின்ற புலவர்பெருமானிடம் தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் பாடங்கேட்டு இராமநாடகம் பாடிய அருணாலக்கவிராயரது மரபினராய சீகாழி வடுகநாத தம்பிரானென்னும் வித்துவச் சிரோமணியிடத்துத் தொல்காப்பியப் பொருளதிகாரங் கற்றுத்தேர்ந்து மிகவும் வல்லவராய் மிளிர்ந்தனர், அதனொடு, வடமொழி, ஆந்திரம், கன்னடம், இந்துஸ்தானி, மகாராட்டிரம், ஆங்கிலம் முதலிய பிறபாஷைகளும் பயின்று அவையிற்றின்கட் டேர்ச்சி பெற்றனர்; இவ்வாறு பன்மலரிடத்தும் பைந்தேறல் பருகிக் களிசிறந்துலவுஞ் சுரும்பரெனச் சீர்பெற்று விளங்கினர். அதுகண்ட அரசாட்சியோர் இவர்தங் கல்வித்திறத்தினைப் பெரிதும் வியந்து பாராட்டினர். பின்னர்த் தாண்டவராய முதலியார் சென்னைத் துரைத்தனக் கலாசாலையிற் செந்தமிழ்த் தலைமைப் புலமை நடாத்துவான் புகுந்து இயற்றமிழ்ப்புல

வர் திலகர் இராமசந்திர கவிராயரோடு சமபண்டிதராய் வீற்
றிருந்தனர். இங்ஙனம் இவர் தமிழ்ப்பண்டிதராகிப் பல்லா
ண்டு கழிந்தபின்னரைச் சென்னைத் துரைத்தனக் கலாசாலை
யெடுபட்டது. ஆகவே இவர் கி. பி. 1843 - ஆம் வருடம்
செங்கற்பட்டுச் சில்லாவிற் சுதேச நீதியதிபரா யமர்ந்தனர்.
இதற்கிடையில் இவர் தமிழ்ப்பண்டிதராயிருந்தபோழ்து முகவை-
இயற்றமிழாசிரியர் இராமாநுசக் கவிராயரோடும், திருத்தணி
கைக் கலவிக்கடல் சரவணப்பெருமாளையரோடும், இவர்
வாதப்போர் புரியுமாறுநேரிட்டது. இவர் திருத்தணிகை
மாலை, திருப்போரூர்ப்பதிகம், கதாபஞ்சரி, இலக்கணவின
விடை முதலிய பல நூல்களையு மியற்றினர் அன்றியும் திரு
க்குறள் பரிமேலழகருரை, நாலடியார், சீவகசிந்தாமணி,
கல்லாடம், திவாகரம், தொல்காப்பியம் முதலிய தொல்
லோர் புனைந்த நூல்களைப் பல பிரதி ரூபங்களைக் கொண்டு
பிழையறப் பரிசோதித்து அவற்றுட் சிலவற்றை யச்சிடுவித்
தனர் கொட்டையூர்ச் சிவக்கொழுந்துதேசிகர் புரசையம்
பதியிலிருந்து கோடீச்சுரக் கோவைபாடியபோது இவர்
மிகப்பேருதவிபுரிந்தனரென்ப. இன்னும் இவர் அப்புரசைக்
கண்ணே யெழுந்தருளியிருந்த பொன்னம்பல சுவாமிகள்
விவிலியநூலிற் குற்றங்காட்டுவான் புக்கு 'வேதவிகற்பம்'
என்றொருநூல் வெளிப்படுத்தியபோது பல பாதிரிமாரும்
வந்து அதனைப் பூருவபக்கம் பண்ணுமாறு தம்மை வேண்ட
லும் தாம் அதற்கு மறுப்பாக 'வேதவிகற்பதிக்காரம்' என்ற
ஒன்றினை யெழுதி முத்துச்சாமிப்பிள்ளை யென்பவர் பெயரினா
லதனை வெளியிட்டனரென்றுங் கூறுப. இவர் அகப்பொருள்
சொ·யமாகவுஞ் சிங்காரமாகவும் பல சிறுநூல்களுந் தனிப்
ன தனைளுஞ் செய்துள்ளார். அவை பற்பலவூர்களிலும் ஆங்காங்

குக் காணப்படும். இவர் தம் கையெழுத்துப் பிரதிகளிற் சில மதுரையம்பதி மகாவித்துவான் சபாபதி முதலியாரவர்களிடத்துள்ளன. இது நிற்க. இத்துணைச் சிறப்பெய்தி விளங்கிய புலவர் பெருமானைத் தாம் மிகவும் நன்கு மதிப்பதற்கு அறிகுறியாக அவர் செய்த இப்பஞ்சதந்திரத்தினைச் சென்னைச் சர்வகலாசாலையார் பிரவேசபரீட்சைக்குப் பற்பல காலத்தும் பாடமாயேற்படுத்தி வருகின்றனர். இந்நூலாசிரியர் தாரணவருடம் சித்திரைமாதம் (கி. பி. 1850-ஆம் வருடம்) தமிழ்நாடு செய்த தவக்குறைவினாலோ அன்றி யெதனாலோ தேகவியோகமாயினர்.

இனிப் பிற்காலத்தினர் இப்பஞ்சதந்திரத்தினை யச்சிடுவான் புகுந்து தமக்குத் தோன்றியவாறெலாம் மாற்றிப் பெரிது மிடர்ப்பட்டனர். அது கண்ட யாம் இப்பதிப்பினைக் கண்ணே யன்னோரான் நேர்ந்த வழூஉக்களைப் போக்கி யேறக்குறையத் தாண்டவராயமுதலியார் தாமே ஆதியில் அச்சிடுவித்த பிரதிக்கிணங்கச் செய்திருக்கின்றனம் என்பது தமிழ் வல்லோர் யாவருங் கவனிக்கற்பாற்று.

வி. கோ. சூ.



கடவுள் துணை.

# பஞ்சதந்திரம்.



## வரலாறு.

கல்விப் பொருளிலுஞ் செல்வப்பொருளிலுங் குறைவில்லாதவர்களுக்கு உறைவிடமாயிருக்கின்ற **பாடலீபுர**மென்னுமொரு பட்டணமுண்டு. அந்தப்பட்டணத்திற் சகல சுகுணங்களோடுங் கூடியிருக்கின்ற **சுதரிசன**னென்னுமரச னொருவனிருந்தான். அந்த அரசன் தன் பிள்ளைகள் படியாமல் மூடர்களா யிருந்ததைக்கண்டு, வெகு விசனத்தோடு மாலோசிக்கத் தொடங்கினான்: "கல்வியுந் தர்மகுணமு மில்லாத பிள்ளைக ளிருந்தாவதென்னை? பால் கொடாத வெறுமைகளைக் காப்பாற்றினால் பலனுண்டோ? வேத சாஸ்திர மறிந்தவனாய ஒரேபிள்ளை யிருந்தாலு மவனாலே குடும்பமெல்லாஞ் சுகமடையும். இப்படிக்கில்லாத பிள்ளைகள் கர்ப்பத்திலே யழிந்தாலும் அழியாவிட்டாற் பிறந்தவுடனே இறந்தாலும் போவது நல்லது. குலத்தி லயோக்கியனான பிள்ளை இருக்கலாகாது. ஜன்மாந்தர புண்ணியத்தினாலே இம்மை மறுமைக்குச் சுகங்கொடுக்கின்ற புத்திரன் பிறக்கின்றான். பாபத்தினால் குலத்தைக் கெடுக்கின்ற புத்திரன் பிறக்கின்றான். மேலும் 'இந்தப்பிள்ளையைப் பெற்றவர்கள் என்னதவஞ் செய்தார்களோ' என்று கண்டோர் சொல்லும்படி நடக்கின்றவனல்லனோ பிள்ளை" என்று அவன் தனக்குள்ளே யாலோசித்துப் பெருமூச்சுவிட்டு, பின்பு

சபையைப் பார்த்து, "இளமையுஞ் செல்வமும் இராஜசமும் அறிவில்லாமையு மாகிய இந்த நான்கனு ளொன்றொன்று தானே கேட்டுக்கெல்லாம் ஏதுவாகும் இந்த நான்கும் ஒருவனிடத்திலிருந்தால் அவனென்னபாடு படான்? பிள்ளை யெண்ணிக்கைக்குப் பிறந்து, துன்மார்க்கர்களா யிருக்கின்ற வென் பிள்ளைகளுக்கு நீதிசாஸ்திரோபதேசத்தினால் எந்த மகாபுருஷன் மறு ஜன்னம் வரப்பண்ணுவான்?" என, அப் போது சகல நீதிசாஸ்திரங்களிலும் வல்லவனாகிய **சோம சன்மா** வென்பவ னெழுந்து, "இவர்களுக்குச் சமானமான அறிவையுடையவர்கள் இவ்வுலகத்திலில்லையென்று சொல் லும்படி நான் ஆறுமாதத்தில் செய்யமாட்டேன் அது வரைக்கும் நீர் நாளை எண்ணிக்கொண்டிரும்" என்றுரைப் பத்தமம் பண்ணினான் அதைக்கேட்டு, நடுக்கடலில் திகைத்தப்பி மயங்கு மாலுமிக்கொரு துறைதோற்றினாற்போல, அரசன் மிகவு மனமகிழ்ந்து அவனுக்கு உபசாரஞ்செய்து, தன்னு டைய பிள்ளைகளை யவன் வசத்திலொப்பித்தான். சோம சன்மா உடனே யந்தப்பிள்ளைகளைத் தன்வீட்டுக் கழைத் துக்கொண்டுபோய்க் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சி யொரு சாக்கரைக்கட்டியாக்கத் திரட்டினாற்போல, நீதி சாஸ்திரங் களைப் பஞ்சதந்திரக்கதையாகக் கற்பித்து, இராஜ குமாரர் களுக்குச் சொல்லத்தொடங்கினான்.

சோமசன்மா, "ஓ இராஜகுமாரர்களே! உங்களுக்கு வேடிக் கையாகச் சில கதைகள் சொல்லுகின்றேன்; கேளுங்கள்" என்று சொல்ல, அவர்கள் "அவையென்ன கதை?" என் றார்கள்; அதற்கவன் "பஞ்சதந்திரக்கதை" என்று சொன் னான்; அவர்கள் "பஞ்சதந்திர மென்பதென்னை? தெரியச் சொல்லவேண்டும்" என்றார்கள். அதற்கவன், "அவை மித

திரபேதம, சுகிரலலாபம, சநதிவிககிரகம, ஆததநாசம அல
லது லபதஹானி, அசமபிரேக்ஷியகாரிததுவம எனனு மை
நதுமாம. அவைகளுண மிததிரபேதமாவது சிநேகததைக
கெடுததுப பகையுணடாககல; சுகிரலலாபமாவது தஙகளுக
குச சமானமானவாகளோடு கூடிப பகையிலலாமல வாழந
திருததல , சநதிவிககிரகமாவது பகைவரை யடுதது உறவு
செயது வெலலுதல; ஆததநாசமாவது தனகையிற கிடை
தத பொருளை யழிததல , அசமபிரேக்ஷிய காரிததுவமாவது
காரியததைத தேறவிசாரியாமற செயதல" எனறு சொன
னன. இராஜகுமாராகள, "ஐயா! அநதககதைகளை யெங
களுககு விளஙகச சொலலவேணடும" எனறாாகள. சோம
சனமா, உஙகளுககு "மஙகள முணடாகுக" எனறு ஆசீர
வதிததுச சொலலததொடஙகினன.



# பஞ்சதந்திரம்.



## முதலாவது
## மித்திரபேதம்.

"ஒரு காட்டில் ஒரு சிங்கமும் எருதுங் கூடி மிகவு மொருமையாக வாழ்ந்திருந்தன; அந்தச் சிநேகத்தைக் கோட்சொல்லுதலு முலோபகுணமு முள்ள வொரு நரி வந்து கெடுத்தது" என்று சோமசன்மா சொல்ல, இராஜகுமாரர்கள் "அஃதெப்படி?" என, அவன் சொல்லத் தொடங்கினான் —

"தென்னாட்டிலே **மகிழாருப்பிய** மென்னும் பட்டணத்தில் **வர்த்தமான** னென்ற ஒரு வர்த்தகனிருந்தான். அவனுக்கு வெகு பணமிருந்தும் இன்னுஞ் சம்பாதிக்கவேண்டுமென்ற ஆசையினால் அவன் பின் வருகிறபடி யாலோசிக்கலானான்: "யாதொன்று சம்பாதிப்பது அருமையோ அதைச் சம்பாதிக்க வேண்டும், சம்பாதித்ததைக் காப்பாற்றவேண்டும். காப்பாற்றினதை விருத்திபண்ணவேண்டும், விருத்தி பண்ணினதைத் தானு மனுபவித்து உத்தமபாத்திரத்திற் செலவழிக்கவேண்டும், காப்பாற்றாத திரவியம் நாசமாகும், விருத்தி பண்ணாதது குறையும், தானு மனுபவித்துச் சற்பாத்திரத்திற் செலவழியாதது வீணாகுமென்று சாஸ்திர மிருக்கின்றது. மேலு மின்பமும் புண்ணியமுங் கீர்த்தியும் மனிதருக்குள்ளே பெருமையு முறவும் நினைத்தது முடித்தலும் யாருக்குண்டு? திரள் திரளாகப் பணங் குவித்தவர்களுக்கேயுண்டு, இல்லாதவர்க ளுலகத்திலே நடைப்பிண மாவார்கள். ஆகையினாலே, மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்கியம்" என்று ஆலோசித்துக்கொண்டு, தன்னிடத்திருந்த சரக்குக்களை வண்டியிலேற்றி அதிற் சஞ்சீவகன், நந்தக

னென னும பெயரையுடைய இரணடெருதுகளைப பூட்டி நடத்திககொணடு தேசாநதரம போனுன. போகுமபோது ஒருநாள நெருஙகிய காட்டிலே மிகுநத பாரததினுற சஞ்சீவக னென னும எருது காலிடறி விழுநது நொணடியாயிறறு அப்போது வாததமானன அநத எருதுக்குப பதிலாக வேறெருதை வணடியிற கட்டி ஓட்டிககொணடு அவவெருதுககு ஓராளைக காவல வைததுப போனுன பிறகு அநதசசேவகன வாததகனிடததுககு இரணடொருநாட் கழிததுபபோய "அநத எருது செததுபபோயிறறு" என று பொயசொனனுன, காட்டில விடபபட்ட எருதோ, ஆயுளப பலததினுற பிழைததுப புலலு முதலாகிய மேயசசலினுல மிகவும பருததுக கொழுதது ஓடிக்தகாலுங கூடி அநதக காட்டிலே யதேசசையாகத் திரிநதுகொணடிருநதது அபபடி யிருககையில, இராஜய பட்டாபிஷேகச சடஙகுகளிலலாமல தன வல்லமையினுல் காட்டிற சஞசரிககினற பிராணிகளுக கெலலாம இராஜததுவததை யடைநதிருககினற பிங்களன் என னும சிஙகமானது தன பராககிரமததாற சமபாதிககபபட்ட இராஜயததைச சுகமாக அனுபவிததுக கொணடிருநது ஒருநாள தாகமெடுததுத தணணீர குடிகக யமுனை யாறறங கரைககுபபோகுமபோது அஙகே சடிதியிலெணறைககுங கேட்டறியாத பேரிடி முழககமபோலும அநத இடபம முககாரமபோட்ட தொனியைக்கேட்டுத திடுககிட்டு "இஃதேது புதிதாயிருககினறது!" என று பயநது நடுநடுங்கித தணணீர குடியாமற சுமமா அசைவற நினறுவிட்டது. அபபோ தவவிடததிலிருநத சிஙகததினுடைய பிரதான மநதிரி குமாராகளாகிய கரடகன், தமனகனெனற நரிகளிரணடுமே இநத அதிசயததை யறிநது ஒன றுககொன று பேசததொடஙகின.

தமனகன கரடகனைபபாாததது, "நமமுடைய அரசன் தணணீாககுப போய்க குடியாமலேன சுமமாநிறகினறுன ? " என, கரடகன " அதை விசாரிப்பதனுல நமககாவ தெனனே ? இனாயகப்படுமோ ? பெருமை யுணடாகுமா ? இணை றறுத தவளைககு நாட்டு ரப்பமேன ? சுமமாவிரு , தனககுத தகாத காரியததைச் செய்கிற

வன கடாவிய ஆப்பைப் பிடுங்கின குரங்கு படட பாடு படுவான" என்று சொல்ல, "அஃதென்னை ?" என்று தமனகன கேடக, கரடகன சொல்லுகின்றது —

"மகததேசத்தி லிருக்கின்ற சுதத்தனென்போ னொருவன கோயிற் றிருப்பணிக்காகக கொண்டுவந தறுக்கவிட்ட மரங்களில வாடசாரன பிளக்கும்படி முளைக எடிததுவிட்டுப போன வொரு மரததினமேல் அந்தககோயில் நநதவனததிலிருக்கின்ற குரங்குகளி லொன்றுவநது உடகாரநதது அஃது அமமரபபிளப்பிலடிதத முளை யை யசைததுப பிடுங்கினவுடனே பிளப்பு நெருங்கி யுடல நசுங்கி யிறநதது. ஆதலால் தனக்குத தகாதகாரியததைச செயதால யாராகும பிராணசசேதம வரும" என்று சொல்லி "நேற்று நாம தின்று மிகுநதிருக்கின்ற இரையைத தின்று சுகமா யிருபபோம வா" என்று கரடகனழைதத பினபு, தமனகன கரடகனைப பாரதது "சுவாமிகாரியஞ செயயாம லிரைதேடுவதையே பெரிதாக நினைககலாமோ? ஒருவன மித்திரர்களுககு உபகாரமுஞ சததுருககளுக அபகாரமும பணணவேணடும, அதறகு இராஜசேவையே தககது, மேலும இராஜாவை யடுததிருககையில வெகுசனஙகளுககு நனமை செயவதே இராஜசேவைககுப பிரயோசனமாம, நனமை செயவ தறகு இடமிலலாவிட்டால உயிரபிழைத திருப்பதனாலென்ன ? காக பலியையுமெச்சிலையும மலத்தையுந்தின்று காக்கையும ஆயிரவருஷம பிழைததிருக்கின்றது, நாயும பசையில்லாத வெள்ளெலும்பைக கவ விக கடிததுக கடிததுப் பலலசைநதும் பசிதீராமற சநதோஷததை யடைகின்றது, மேலும அது யஜமானன கையிலிருக்கின்ற ஒரு கவள மெச்சிலைப பாரததுக் காலிலவிழுநது, வயிற்றை யெக்கிக்கொ ணடு எளியமுகத்தைக காட்டி அவன் முகததைப பாரதது வாலைக் குழைததுக் கெஞ்சிக காததுக கிடநது கொஞச மெச்சிலை வாங்கித தின்னும். யானையோ, பாகனைப பாராமலும் அடுக்காமலும அவன வேணடி வேணடி வலியக் கொடுக்க, கருவததோடு வாங்கி நாயைக காட்டிலு மாயிரமபங்கு அதிகஞ சாப்பிடும, சிங்கம பசியினறல சங் கடபபடும்போது, நரி சமீபததிலிருநதாலும் அதை யசட்டைபண்

யானையையே கொல்லும், ஆதலாலுலகத்தில் யார் புகழோடு சீவிக்கின்றார்களோ அவர்களே பாக்கியவான்கள், சிறுகுழிகள் கொஞ்ச தண்ணீரால் நிறையும், எலியின் சேரங்கை சில தானியத்தால் நிரம்பும், அப்படிப்போல் மூடன் இதாகிதந் தெரியாமற் கொஞ்சத்திலே சீவனம் பண்ணுவான், அவனுக்கும் பசுவுக்கு மென்ன பேதம்? ஆகையால் இராஜ காரியம் பார்த்துப் பெருமையுடன் சீவிப்பதே நல்லது" என்றிப்படிச் சொல்லக் கேட்டு, கரடகன் தமனகனைப் பார்த்து "நல்லது. இந்த யோசனைகளுக்கும் இந்தப் பேச்சுக்களுக்கும் இப்போது நாம் இராஜகாரியத்தி லிருக்கவில்லை, இரை தேடுகிற காரியத்தி லிருக்கின்றோம், அப்படி யிருக்க நீயேன் வீணான மனோராச்சியம் பண்ணுகின்றாய்? மூடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் கிட்டுமோ?" என் றிகழ்ந்து சொல்ல, தமனகன் "நல்லதிருக்கட்டும், பிரதானியுங் காலத்திலே அப்பிரதானியானான், தன் முயற்சியினாலுங் குணத்தினாலும் லகுவானவனும் சமாதத்னுகின்றான், யாரும் மேலான காரியத்தையே யாலோசிக்க வேண்டும், அது கைகூடாவிடினும் பெருமை வரும், புத்திசாலிகள் அருமையான காரியங்களைச் செய்வார்கள், மலையுச்சியிலொரு பெருங்கல்லை யேற்றுந் தரிது, அங்கிருந்து அதைத் தள்ளுவதெளிது, ஏரியினீரைக் கட்டுதலரிது, உடைத்த லெளிது, பெருமையுஞ் சிறுமையு மவராலேயே வரும், 'முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார்' என்னும் பழமொழியையாயினுங் கேட்டிலையோ?" என்றிப்படிச் சொல்ல, தமனகனைக் கரடகன் பார்த்து "நல்லது நீ போய்ச் சிங்கத்தினிடத்தில் எதைக்குறித்துப் பேசுவாய்?" என, தமனகன் "நம்முடைய சுவாமி மூடத்தனத்தாற் பயந்திருக்கின்றான், அதை நீ யெப்படி யறிந்தாயென்று கேட்கின்றாயோ? சொன்னபொருளைப் பட்சி மிருகங்களும் அறிந்துகொள்ளும்? சொல்லாம லறிகின்றவனே பண்டிதன், அப்படியறியாவிட்டாற் புத்தியாற் பிரயோசனமென்ன? நானு மிங்கே யிருந்தபடியே யறிந்தேன், இப்போது நானிதை முன்னிட்டுக்கொண்டு போய்ச் சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக் கொள்ளுகின்றேன்" என, தமனகனைப் பார்த்துக் கரடகன் "நம்மு

டைய அரசர்கள் மோதுகொள்வதுபோற் கடிக்கின்றவர்கள், அரசரும் நெருப்பும் பாம்புஞ் சரி, அப்படியானுற பழக்க மில்லாம லிருக்கையி லவனை யெப்படிச் சிநேகம் பண்ணிக்கொள்வாய்?" என, அப்போது தமனகன் "நான் பேசுவதிற் சதுரனென் றறியாயோ? சமர்த்தனுக் கெதுபெரிது? பறக்கிறபறவைகளுக்கு எதுதூரம்? வித்துவானுக் கெது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக் கெவன் சத்துரு?" என, கரடகன் "அப்படியானாலும் இராஜாக்களிடத்தி லகாலத்திற்போனு லவமானநேரிடும்" என்றது. அதற்குத் தமனகன் "அவமானம் வந்தாலும் எஜமானன் சமீபத்திலேயே யிருக்கவேணடும், எவன் சமீபத்தி லிருக்கின்றுனே அவனுடனே அரசர்கள் காரியங்களைச் சொல்லுகின்றார்கள், கொடிகள் கிட்டவிருக்கிற மரத்திலேயே படரும், அரசர்களும் ஸ்திரீகளும் தங்களைக் காத்து இங்கித்தம் பேசுகின்றவர்க ளிடத்தில மனம்பிரங்குவார்கள்" என, கரடகன் "நல்லது, நீ யவனிடத்தி லெப்படிப் பேசுவாய்?" என்றது தமனகன் "நல்லமழை பெய்திருக்கையி லெப்படி விதையினின்று முளைகள் புறப்படுமோ அப்படி இராஜாவின் கேள்விக்கேற்க என் வாக்கினின்றும் உத்தரம் புறப்படும், ஆயினும் ஒருவேளை பிரகஸ்பதியும் பேசசில தவறுவானுனல மற்றவர்களுக்குக் கேட்பானேன்? எப்படியுங் காலமறிந்து பேசினுல யாதோ ரவமானமும் வாராது, அரசர்கள் தங்கள் காரியம் எவனுலே யாகின்றதோ அவனிடத்தில ஒருவேளை சிறிது குற்றம் நேரிட்டாலும் அதைப் பாராட்டாமல அவனைப் பரிபாலித்து விருத்தியடையப் பண்ணுவார்கள்" என, கரடகன் "அரசர்கள் மலையைப்போல அனுசரிக்கிறதற்குக் கடினமாயிருக்கின்றார்கள்" என, தமனகன் "ஆயினு மவரவர்கள் சுபாவமறிந்துபேசி நமக்கிதம் பண்ணிக்கொள்ளவேணடும்" என்று, கரடகனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, சிங்கத்தி னிடத்திற்குப் போய்த் தூரத்திலே நின்று தண்டம் பண்ணி அரசனுத்தரவினு லுட்கார்ந்தவுடனே, சிங்கம் "நெடுநாளா யுன்னைக்காணேம்" என, தமனகன் "இப்போது தேவரீ ரிடத்திற்கு வரத்தக்க காரியம் நேரிட்டதனுல் தங்களுடைய திருவடியண்டை வரலானேன், இல்லாவிட்டால்

வந்ததற்குப் பிரயோசன மென்ன? இராஜாக்களுக் கொருவராலும் பலனில்லா விட்டாலு மொருவேளை சிறு தருமமும் பலலுக்குதத வுதவும்; மற்றவைகளுக்குக் கேட்பானேன? மேலு மொருவேளை யரசாகள் குணவானை யசட்டை பண்ணித் தள்ளிவிட்டாலு மவன சற்குணம் போயவிடுமோ? நெருப்பைத் தலைகீழாகப் பிடித்தாலு மதன சுவாலை கீழாகுமோ? ஆதலா லரசாகள் பரிசோதித்தறிந்து யோக்கியனை நல்ல காரியத்தில வைத்தா லவன இராஜாவுக்குக் கீர்த்தியைப் பெருகப் பண்ணுவான, ஆகையா லெனனைத் தாங்கள் சிறு நரியென றவமானம பணணலாகாது, விட்டுணு வெடுத்திருந்த வராக வடிவை யுலகத்திற பூசிக்கவில்லையோ? ரூபத்தைப் பாராமற குணத்தைப் பாாக்க வேணடும, மலைபோலிருக்கின்ற தோ சிறு சுள ளாணியால நிலைபெறும, சுவாமி காரியத்திற பறறுள்ளவன, கருவியுங காலமு மறிந்து கரும முடிக்கு மாறறலுள்ளவன; இந்த வலலமையெலலா முமது சாாபிருந்தாற பிரகாசிக்கும், வாள முதலிய ஆயுதங்களும, வீணைமுதலிய வாத்தியங்களும, பூமியும, ஸதிரீகளும, யோக்கியாகளும, சாஸதிரங்களுமாகிய இவையெல்லாம பரிபாலனம பணணுகினறவாகளாற பிரகாசிக்கும, அணடையிற சமாத்தனில லாத இராஜாவுக்கு அபகீாத்தி வரும" என றிப்படிச சொல்லக்கேட்டு, சிங்கம "தமனகா! நீ யெமபிரதானி புத்திரனல்லையோ?" என, தம னகன "சுவாமி" என்று வணங்கிச சும்மா விருந்தது. சிங்கம "எதா வது சொல்லவேணடுமெ திருந்தாற சொல" என, தமனகன "தேவ ரீர் [illegible] ணீாக்கு வந்து குடியாமல மெய்ம மறந்து சும்மா நிறகினறீா க[illegible] " என, சிங்கம "மெய்தான, நானிந்தக் காட்டில வெகுநாட் சு[illegible]யிருந்தேன, இப்போது இதை விட்டுவிட்டத் தக்கதாகச சமப வித்திருக்கின்றது, என றைக்குங் கேளாத மேகமுழக்கம்போ லொரு தொனி இனறைக்குக் கேட்டேன, அதனாலேதான அப்படி நின றேன அந்த முழக்கம்போலவே யிருக்குமன்றோ அந்தப்பிராணியும் ஆதலா லிதைக்குறித்து என்ன சொல்லுகின்றாயோ அவையே யென் [illegible] பிரமாணம, இப்போது வழக்கி விழுகையில நீ ஊன்றுகோல [illegible] கிடைத்தாய" என, தமனகன "சுவாமி, தொனியினாலே பயப

படலாகாது, முனனொரு நரி ஒரு தொனியைககேட்டுப பயநது பிறகு நெருஙகிப பாாததவுடனே யஙகே தோலுங கோலு மிருக்கக கணடது" என, சிஙகம "அஃதெனனே ?" எனறுகேட்க, தமனகன "ஒருநரி பசியால வருநதி யிரைக்காகத திரிநது திரிநது ஒரு போாக களததில வருமபோது அஙகே அசதியிலுணடான ஒருபெரிய தொனியைககேட்டு மிகவும பயநது 'நான செததே' னெனறு திடுககிடடது பிறகு சறறே முனனே போனவுடன அஙகொரு பெரிய பேரிகையைபபாாதது, அடுததிருககினற மரததினகிளை காறறிலசைநது அதிலடிககத தொனியுணடாயிறறெனறு அறிநதுகொணடு, அதனருகே போயபபாாதது, அஙகே பேரிகையின றோலுஙகோலுமே யலலாமல வேறொனறு மிலலையெனத தெளிநது சநதோஷ மடைநதது, ஆதலாற சததததினலேமாததிரம பயபபடலாகாது, தாஙகள கடடளைகொடுததால அநதசசததததின மூலததையறிநது வருவேன" என, சிஙகம அபபடியே செலவுகொடுததது பிறகு தமனகன சஞசீவகனெனனு மெருதினிடததிறபோயப பேசி அதைச சிநேகமபணணிககொணடு, சிஙகததணடைவநது தணடமபணணி முனனே நின்றது சிஙகம "நீ யநதப பிராணியை யினனதெனறறிநதுவநதாயா?" என, தமனகன "தஙகள கடடளைபபடியே போயபபாாததேன முன தாஙகள எபபடி நினைததீாகளோ அபபடியே புஷ்டியாயிருககினறான, அவன தஙகளணடை விருமபுகினறான, கடடளையானால திருமபிபபோய்த தரிசனைததுக கிடடுககொணடுவருவேன" என, சிஙகம "நலலது அபபடியே யாகடடும" என, மறுபடி தமனகன எருதணடைபோய உபசாரததோடு அழைததுவநது இராஜாவைத தரிசனமபணணுவிததது. பிறகு பிஙகளனுககுஞ சஞசீவகனுக்கும வெகு சிநேகமுணடாய இராஜாவுககு மற்ற யாருமவசியமில்லாமல இபபடி வெகுகாலங கழிநதது அபபோது பிரதானி புததிராகளாகிய கரடக தமனக னெனனு மிரணடு நரிகளுககும இரையொனறு அகப்படாமையால ஆலோசிககத தொடஙகின தமனகன "நீ காட்டிலே தனிததிருநத சிஙகததுடனே எருதைச சிநேகம பணணவிததது, யானையானது தன மததகததைதக கொததுவதற்கு _ால்

சததைத தானே யெடுததுப பாகன கையிற கொடுபபதுபோ லா யிற்று ; மேலும முனனு ளாடடுககடாச சணடையில் நரிசெததததும், ஆஷாடபூதியின கூட்டுறவாற சநநியாசி பொருளிழநததும எப்படி யவரவாகள் குற்றததினுலேயோ அபபடியே நமது குற்றததினுலே யே நமககினைிடடாமற போயிறறு" என, கரடகன " அஃதெப் படி ? சொல" என, தமனகன் சொலலுகினறது —

" ஒரு தேசததில் **தேவசன்மா** வெனனும ஒருசநநியாசி தான பிசசையெடுததுச சமபாதிதத திரவியததைக கநதைககுள் வைதது யாாக்கும தெரியாமல தைத்துப் போாததுககொணடு பின னும பிசசையெடுததுச சாபபிடடுக்கொணடு திரிய, அசசூதையறிநத **ஆஷாடபூதி**யெனனு மொரு திருடடுப பிராமணன 'இநதக கந தையை மாததிர மெபபடியாயினும திருடிககொணடால, நாமெப் போதும திருடடுவேலை செயயவேணடுவதிலலை, நமமுடைய தாசிககு வெகுநாளைககு நடககு' மெனறு ஆலோசிதது ஒரு பிரமசாரி யைபபோல அநதச சநநியாசியினிடததிறபோய அவனகாலில வீழ நது 'அடியேனுககு ஞானோபதேசஞசெயது இநத நிஸ்ஸாரமாகிய சமுசாரசாகரததில நான இனனு மலையாமற சிறிது கடைககணணுற பாாதது எனனைக கடைததேறபபணணுக. ஓ மகானுபாவா ! ஓ பர துககஞ சகியாத பரமபுருஷா !' என்றிபபடி யழுதகணணுஞ் சிநதிய மூக்குமாகக கலஙகுகிறக, அதைப பாசாஙகென றறியாத அநதச சந நியாசி இவனறலைமேற கையைவைததுப 'பயபபடாதே' என்றுன, அதுமுதலாக ஆஷாடபூதி வெகு பயபததியுடனே அவன காலா லிடடவேலையைக கையாறசெயதுகொணடு, கநதைக்குச சமயமபாா ததுககொணடிருககுநாளில ஒருநாள ஒரு பிராமணனவீடடி லிருவ ரும விலாபபுறம வீஙகப பிடசை பணணிககொணடு வெகுதூரம் வநதபிறகு ஆஷாடபூதி ஒருவருமறியாமல ஒரு துருமபை யெடுத தத த[illegible]லைமேலே வைததுககொணடு அநதத துருமபைக குருவுக் [illegible] ளாடடி, 'ஐயோ ! நமககுப பிட்சைகொடுதத பிராமணன் [illegible]பாறபு எனறலையி லொட்டி வநதுவிட்டதே, அனனமிட்ட [illegible]க்குமிடலாமோ ? 'உபபிட்டவரை யுளளளவு நினை' என்று

பழமொழியுமிருக்கின்றதன்றோ?' என, வாயபதற நடுநடுங்கி "இதை அநத அனனதாதா வீட்டிற போட்டுவிட்டு இதோ நொடியளவில வருவேன" என்று குருககள பாாககுமபடி பரபரப்பாகச சிறிது தூரங காலடி பிட்டததிற படுமபடியோடி, ஒருசெடிமறைவி லுட்காாநதிருநதுவிட்டு, பினபு இளைககவிளைககவோடிவநது ஆசாரியன காலில விழுநதெழுநது, "சுவாமி! உமமுடைய அநுககிரகததினால இநதப பாவததிறகுத தபபினேன" என்றன இதைபபாாதது அநத ஏழைச சநநியாசி ஆசசரியப்பட்டு, இவன பரசொததுக காசைபபடாத பரமாததுமா வென்று நமபித தனனுயிாககுச சமானமாக நினைததிருநத கநதையைச சீஷன கையிறகொடுதது, ஒரு குளககரையிலிருககசசொலலித தான சலபாதைககுச சென்று காலமபப போனவிடததில இரண்டு ஆட்டுக கடாகக ளொனறோடொன்று முட்டிச சணடை செய்ய, அவைகளின மணடையிலிருநது ஒழுகுமுதிரததை யுணணலாமென்று ஒருநரிபோய இரணடுககும நடுவி லகபபட்டிறநதது. அவன அநத அநாததததைப பாாததுககொணடு சிறிதுநேரமிருநதான. அபபோ தநதச சீஷன 'இதுதான நலல சமயம், இதுவிட்டா லினிககிட்டுமா' காறறுளளபோதே தூறறிக கொளள வேணடு' மென்று நினைததுக கநதையைச சுருட்டிககொணடு ஓடிபபோனான. உடனே சநநியாசி வநதுபாாததுச சீஷனைக காணாமல, 'ஓகோ! நமமை யாரோட்டூதி யேயததானே, நாம மோசமபோனோமே' யென்று திகிறபட்டு, உபபுககணடம பரிகொடுதத பாாபபனியைபபோல ஒருவருடனுஞ சொலலாம லிருநது விட்டான" என, இதைககேட்டுக கட்கன இதறகு "நான செயயததககதெனனை?" என்று கேட்கத தமனகன "யாதொன்று போயிற்றோ அதை மறுபடி சேகரிககவேணடும், எதைச சமபாதிகக விலலையோ அதைச சமபாதிகக வேணடும், எதிராகவரும விககினஙகளைத தடுககவேணடும், என றிபபடி யாலோசிததுப பணணுகின்றவ சொலலனோ மநதிரி? இபபோது பிஙகள சஞசீவகாகளுககுளள சிநேக நமக்கு எல்லாச சஙகடஙகளு நேரிட்டன, இவாகளுடை தமனகன "நான பிரிததாறறுன நமககு இவவளவேனும அனனஙகிடை நேகம பணணல்

துவதறகு டால்

சொல்ல, கரடகன் "அந்தப் பிங்கள சஞ்சீவகர்களுறவைக் கெடுக்க யாராலாகும்? மணியினின்று மொளி பிரிக்கப்படுமோ? இது முடியாத காரியமன்றோ?" என, தமனகன் "என்ன சொல்லுகின்றாய்? உபாயத்தாலாவது பராக்கிரமத்தாலாகுமோ? ஒரு காகஞ் சொர்ண மாலையினால் ஒரு கிருஷ்ண சர்ப்பத்தைக் கொன்ற தறியாயோ?" என, கரடகன் "அஃதெப்படி?" என்று ஆவலோடு கேட்கத் தமனகன் சொல்லத் தொடங்கிறது —

"ஒரு பெரிய மரத்திற் கூடுகட்டிக்கொண்டு ஆணும்பெண்ணுமாகிய இரண்டு காக்கைகள் நெடுநாளாய் வாழ்ந்தன. அந்த மரப் பொந்தில் ஒருநாகம் வந்துசேர்ந்து அந்தக்காகங்கை யிடும் முட்டைகளை யெல்லாங் குடிக்கத் தலைப்பட்டது. இதற்கென்ன செய்யலாமென்று காகம் மிகவும் விசனப்பட்டுத் தனக்குச் சிநேகமாகிய ஒரு நரியினிடத்திற் போய் நடந்த சங்கதிகளைச்சொல்லி, "இப்போதாகிலு முட்டைகளைக் காப்பாற்றுகிறதற் கென்ன செய்யலாம்?" என, நரி 'ஒரு நண்டானது வெகு நண்டாசையைக் காட்டிக் கொக்கைக் கொன்றதுபோல அப்பாம்பினை ஒருபாயத்தாற் கொல்லவேண்டும்' என, நாகம் "நண்டு கொக்கை யெப்படிக் கொன்றது? சொல்லுமையா" என, நரி சொல்லுகின்றது —

"மீன்களையே பிழைப்பாகத் தின்றுவளர்ந்த வொரு கிழக்கொக்கானது குளக்கரையில் வந்து விசனமாய் நின்றுகொண்டிருந்தது. அப்போது அதிலிருந்த மீன்கள் கொக்கைப்பார்த்து 'நீ உன்னுகாரத்தை விட்டுச் சும்மா இருப்பானேன்? சொல்' என, கொக்கு "நான் மீன் றின்பது மெய்தான், ஆயினு மின்றைக்கிங்கே செம்படவன்வந்து எல்லாமீன்களையும் பிடிக்க விருக்கின்றதனால் என்னுடைய இரைகளெல்லாம நிர்மூலமாய்ப் போகுமே யென்றேங்கிச் சும்மா இருக்கின்றேன்' என, இதைக்கேட்டு மீன்களெல்லாங் கூட்டங்கூடி 'எவன் நமக்கபாயஞ்சொன்னானோ அவனே யுபாயஞ் சொல்லுவான்' என்றாலோசித்துப் பிறகு கொக்கைப்பார்த்து, 'நீயே யெங்களை யிப்போது ரக்ஷி' என, கொக்கு 'நான் செம்படவனோடு சண்டை பண்ணச் சமர்த்தனல்லேன்; மேலும் நான் கிழவன்; உங்களை

வேறோரிடததிறகுக கொணடுபோவேன, அதனுலெனககு மிநத,
தளளாமையான காலததிற் பரோபகாரி யெனனும பெயரும் வரும்,
நீஙகளும வெகுகாலம பிழைததிருபபீரகள' என, அபபோதநதப
பேதைமையான மீனகளெலலாம பிராணனைக காபபாறறும்பொ
ருட்டு அதன பேசசை நமபி 'நலலது. அபபடியே கொணடுபோக
வேணடும' எனக கெஞச, அநத வஞசனையுளள கொககு நடைக்
கொவவொனறாகக குளததிலிருநத மீனகளை யெலலாம மூககி
னுற கவவிககொணடுபோயச சில மீனகளைததினறு மறறவைகளை
யொருபெரிய பாறையினமே லுலரவைததது பிறகு அநதக குள
ததிலிருநத ஒரு நணடு இநதக கொககைபபாரதது 'ஓ சீவகாரு
ணியனே! நானமாததிரநதானே பாபி? அநத மீனகளை யிரக்ஷித
ததுபோல எனனையு மிரக்ஷிககலாகாதோ? எனனையு மவவிடத
திறகுக கொணடுபோகவேணடும" என வேணடிககொளள, கொ
க்கு 'வருஙகாலததி லெலலதுவும வலியவரு'மென றுளளுககுளளே
சநதோஷிததது, அபபடியே நணடையுங கவவிககொணடு போகும
போது, வழியில மீனகள செததுக கிடபபதையும மீன முடகள
சிநதிக கிடபபதையும மீனகள பாறையினமே லுலருவதையும
நணடு பாரதது, 'ஐயோ! பல மீனகளையுங கொனறு இநதககொககு
நமமையுங கொலல வநதது!', நமமை இது கொலவதறகு முனன
ரே நாமிதனைக கொல்வோம" எனறு ஒருபாயம நினைததுக கொக
கைபபாரதது 'எனனை நீ வருததபபடடு எடுததுககொணடுவநதாய,
அஙகே யெனது பரிவாரஙகளிருககினறன, ஆகையா லவவிடததிற
கே யெனனை நீ மறுபடியுங கொணடுபோனு லவைகளையுங காண
பிபபேன' என, அதைககேட்டுக கொககு பேராசைபபட்டுத திருமபி
யநதக குளததிறகு நேரே வருகையில, நணடு கொடுக்கினால அநதச
சர்வசீவதயாபரக் கொககின கழுததை யிரணடு துணடாக நறுககிக
குளததில் வீழ்நது சுகமாய் வாழநதது. ஆகையாலநதக கொககைப்
போலப் பாம்பையுங கொலலவேணடும" என, காகம "அபபடிப்
பாம்பைக்கொலல நான செய்யவேணடிய வுபாயமெனனை?" எனறு
கேட்க, நரி இப்பட்டணதத திராஜகுமாரி குளிக்கினற மஞ்சனச்சாலைக்

குப்போ, அவள் ஸ்நானம் பண்ணும்போது ஆபரணங்களைக் கழற்றி வைத்திருப்பாள், அந்த ஆபரணங்களி லொன்றை யெடுத்துச் சனங்கள் பார்க்கும்படி கொண்டுவந்து அந்த மரப்பொந்திற் போடு" என்றுசொல்ல, காக்கையு மப்படியே செய்ய, அந்த இராஜனுடைய வேலைக்காரர் போய் அந்த மரத்தின் பொந்தைப் பிளக்க, நாகஞ் சீறி வந்தது, வரவே அதை அவர்கள் இரண்டு துண்டாக நறுக்கி யெறிந்தார்கள், இப்படிக் காகத்தின் காரியம் நிறைவேறிற்று, ஆகையா லெல்லா முபாயத்தினுற கைவசப்படும், எவன்புத்திமானே அவன் பலவான். எவனுக்குப் புத்தியில்லையோ அவனுக்குப் பலமெங்கே? பூர்வம் புத்தி பலத்தினுலொரு முயல் சிங்கத்தைக் கொன்றது" என, "அஃதெப்படி?" என்று கரடகன்கேட்கத் தமனகன் சொல்லுகின்றது —

ஒரு நெருங்கிய காட்டில் மதோன்மத்த னென்னுஞ் சிங்கமானது அக்காட்டினகண்ணுள்ள மிருகங்களைக் கொன்றுதின்று கொழுத்து வெறிகொண்டு திரியுநாளில் மிருகங்களெல்லாமொன்றுகத் திரண்டு அதனண்டை போய் "ஓ மிருகேந்திரா! உமது காட்டிலிருக்கு மிருகங்களையெல்லா மிப்படி இனி நீர் கொன்றால் மிருகங்கள் நிர்மூலமாயப்போம், ஆதலால் நாங்கள் தினமொவ்வொன்று உமக்கிரை கொடுத்துக்கொண்டு வருகின்றோம், அதை நீர் பக்ஷித்துக் கொண்டிருக்கலாம்" என்று பிரார்த்திக்க, சிங்கம் அதற்கிணங்கி 'அப்படியே யாகட்டு, மென்'ச் சத்தியஞ் செய்து கொடுத்தது. இவ்வாறு மிருகங்கள் ஒவ்வொன்றுகச் சிங்கத்திற் கிரையாயக் கொண்டு வருநாளில், ஒருநாள் ஒருகிழமுயலினது முறைவந்தது. அப்போது விலங்குகளெல்லாங் கூடி 'இன்றைக்கு உன்முறை குறு' என்றுசொல்ல, முயலானது இன்றைக்கு நமக்கு மரணம், செப்படியினுல இதற்கோ ருபாயம் யோசிக்கவேண்டும், புத்திசீவர்க்கு எதுதான் கைகூடாது? ஆகையால் நாமிட போது இயத்தாற சிங்கத்தைக் கொல்வோமென்று ஆலோசித்து, மெள்ள மெள்ள நடந்து அச்சிங்கத்தின் பசிவேளை தப்பிவரச் சிங்கம் பதப்பாரத்து, "முயலே! யானையானுலுமென்னுடைய பசிவேளை

தபபி வருவதில்லையே, நீயெவவளவு பிராணி? இபபடித தாமசமாய வரலாமா?" என்று மிகுநத கோபததோடு கையைத தரையிலே மோதிககேட்க, முயல 'ஐயனே! இஃது எனது குறறமன்று, உன்னுடைய பசிவேளைககே வநதேன, வநதவழியிலொரு பொலலாத சிங கததைக் கணடு பயநதொளிததிருநது அநதசசிஙகம் போனபினபு வநதேன" என்று சொலலச சிஙகம "என்னை யல்லாமல இநதககாட டில வேறே சிஙகம நீ பாாததாயா? காடடுவா" என்றழைகக அழைததுககொணடுபோயச சேறுநீரு மிகுநதவொரு பாழுங்கிணற றைககாட்டி "இதிலே யிருககினறது" என்னச சிஙகம முயலின பேச்சை நமபிக கிணற்றையெட்டிப பாாததது, அதிற றன்றின தன னிழலைக்கணடு அநதசசிஙக மிஙகேயிருககினறதென்று நினைதது அதைக கொலலவேணடுமென்றும கோபததோடு அதிற்பாயநது சேறறிலழுநதியிறநதது ஆகையால எவன புததிமானோ அவன பலவானென்றுனககுச சொனனேன" என, கரடகன "சிஙகத்தி னிடததிறகுச சுகமாயபபோ, உனககு மஙகளமுணடாகட்டும" என்ப பிறகு தமனகன அநதச சிஙகந தனித்திருககினற சமயமபாாததுப போயத தணடமபணணி, "சுவாமி! உமககினறைக கொருபொல லாஙகு நேரிட்டது, அதை நான றிநது கடடளையிலலாமல விணணப பம பணணிககொளளலானேன" என, சிஙகம "அதென்னை? சொல" என, தமனகன "உமமுடைய மித்திரனாகிய சஞசீவகன உம மிடததில விசுவாசங காணபிதது உமமுடைய இராசசியததைப பிடுஙகிககொளள யோசிததிருககினறுன, இதை நீா பொயயென்று நினைததுக கோபிததாலும அலலது தணடிததாலும இராஜனுக்கொ ருதுனபம வருமபோது தந நலததைபபாராமல இராஜனுககு நல உபாயஙகளைப போதிததுச செயயததககக காரியஙகளைச செய்நதச தல மநதிரிகளுககு நீதிததொழிலாகையால உமககிதைதத தெரிவிககிக றேன" என, பிஙகளன இதைககேட்டு ஆசசரியப்பட்டுச சுகைப் பிருநதது. பினனும தமனகன "நீா அவனை முககியப பிரதானிபடிப் னீா, அபபடியேயிருககட்டும, எனக்கென்ன? இராஜாவும் பிறனறு ரியும சமானமாயிருந்தால, இராஜலட்சுமி அவவிருவரிலொருலைக்.

னைக் கைவிடுவாள், மேலும் எப்போது இராஜா ஒருவனையே பிர தானியாகச் செய்கின்றானோ அப்போது அந்தப் பிரதானிக்குக் காவமுண் டாகின்றது, அவன் சுதந்தரனாய் இராச்சியவாசையால் இராஜா வைக் கொல்ல இச்சிக்கின்றான்; ஆகையால் இப்படிப்பட்ட மந்திரியை வேரோடு களையவேண்டும், இல்லாவிடின் அவனால் தீங்குநேரிடும். இது தங்களுக்குச் சொல்லவேண்டுமோ? தாங்கள் எல்லாமறிந் திருக்கின்றீர்கள், உலகத்திற் செல்வத்தை விரும்பாதவன் அரியன்" என்றிப்படியெல்லாஞ் சொல்லக்கேட்டுச் சிங்கம் நகைத்து "எனக் குச் சஞ்சீவகனிடத்தில் இருக்கின்ற சிநேகம் போகாது, மித்திரர் கள் என்ன அநியாயம் பண்ணினாலும் அவற்றை நாம் பிரியமாக வே நினைக்கவேண்டும்" என்றது. தமனகன் "இதுதான் புத்திக்குத் தோஷம், இதனால் உமக்கபாயம் வரும், சாதுக்களது புத்தியைக் கே ளாமல் துட்டர் புத்தியைக் கேட்கின்றவனெவனோ அவன் மருந்து தின்னாத ரோகியைப்போல விபத்தை யடைவான், காதுக்கினிமை யாயும் இதம்பண்ணுவதாயு மிருக்கின்ற வசனந் துர்லபம், காதக னுடைய வசனஞ் செவிக்கினிமையாயினும் அதைக் கேட்கலா காது" என்று சிங்கம் "நான் அபயங்கொடுத்து இரட்சித்தவன் எனக் குத் துரோகம் பண்ணுவானோ? என்ன பேசுகப் பேசுகின்றாய்? போ" என, மறுபடியுந் தமனகன் "துஷ்டர்குணம் மாறுமோ? நா யின் வாலைக் குணக்கெடுக்கலாமோ? எட்டிமரத்தை அமுதம்வார்த் தது வளர்த்தாலும் அதற்குத் தித்திப்புண்டாகுமோ? எப்படியும் பிறர்க்கிதம் பண்ணுவது சாதுவுக்கு முக்கியதருமம், ஆகையால் தாங்கள் கேளாமலிருந்தும் இந்த விருத்தாந்தத்தைச் சொன்னேன், இனிமேல் லெனமேற் குற்றமில்லை, ஒருவேளை இராஜா பாமரர்களு டைய புத்தியைக் கேட்டுச் சங்கடப்படும்போது காரியக்காரர்மேற் குற்றஞ் சுமத்துவதுண்டு ஆதலின் நான் சொன்னேன்" என்றிப்படிச் சொல்லிச் சும்மா விருந்தது. அதற்குச் சிங்கம், "இதை நான் சஞ் சீவகனுக்குச் சொல்லவேண்டும்" என்றது. தமனகன் "அவனு க்கிதைச்சொன்னால் அவன் சாக்கிரதைப்பட்டு வேறோருபாயத்தினா பொல்லாங்கு தேடுவான், ஆகையால் இதை யவனுடன் சொல்ல

திருப்பதே யோககியம, இராஜாவின மநதிராலோசனை யிரகசிய மாகவே யிருககவேணடும" என, இதைககேடடு மறுபடியுஞ சிஙகம "அநதச சஞசீவகன விரோதபபடடு எனன செயயமாடடுவான? அவன சாமாததிய மெவவளவு ?" எனறு சொலல, நரி "நாமவனை யறியமாடடோம, அவனது பராககிரமமுஞ சுபாவமு நமககெபபடித தெரியும? ஒருவன குணததை யறியாம லவனைச சோககலாகாது. சோததா லொரு சீலைபபேன மூடடுப பூசசியைச சோததுத தான நாசமடைநததுபோ லாகும" எனச சிஙகம "அஃதெப்படி? சொல" எனத தமனகன "ஒா இராஜாவின பஞசணையில மநதவிசர்ப்பணி யெனனுமொரு சீலைபபேன நெடுநாளாக வாசமபணணிககொண டிருககையில ஒருநாள அவன வீடடுககு டிண்டிபனெனனு மூடடுப பூசசி வநதது, அதைப பாாததுச சீலைபபேன 'அபபா! நீ பொல லாதவன, மூடடைகளைபபோனற பறகளிலேலே தூஙகுவதறகு முன னமே துடுககாயக கடிபபாய, நீ சமயந தெரியாதவ னுதலால இராஜ சயனததிலிருககத தககவனலலை, இவவிடமவிடடோடிப போ' எனறு கடுகடுததுச சொலல, மூடடு 'நானபபடிச செயய விலலை, நீ சொனனபடியே கேடபேன' எனறு காவில விழுநது பிராாததிககச சீலைபபேன மனமிரஙகி 'நலலது நீ வெடுககெனறு கடியாமல நிததிரைசெயயுஞ சமயம பாாதது மெதுவெனக கடிததுக கொஞசரததங குடிததிரு' எனறு சொலல, அப்போ தநத மூடடுப் பூசசி 'நலலது' எனறிருநது பிறகு இராஜா விழிததிருககும்போதே சுறுககெனறு கடிகக, இராஜன திடுககென றெழுநதிருநது 'எனனை கடிததது' எனறு சோதனைககாரருடன சொல்ல, அவாகள விளக் கைககொணடு சோதிகக, மூடடு கடடிறசநதி லொளிததுககொண டது, அதற கிடஙகொடுதத சீலைபபே னகபபடடது, அவாகளதனை 'நீயனறோ வெஙகளிராஜனைக கடிததாய?' எனறு நசுக்கிக கொன றாாகள ஐயோ! அது வகைதெரியாம லிறநதது ஆகையா லொரு வன குணததை யறிவதறகு முனனமே யவனுடன சகவாசம பண லாகாது" எனச சிஙகஙகேடடு, "அநதச சஞ்சீவகனுடைய துஷ் சுபாவ மின்னபடியென றெனககுத தெரிநதா லப்போது கிசம"

என்று சொல்லத் தமனகன் "அந்த எருது தங்களைக்கொல்ல நினைத்துக் தன் கொம்புகளை முன்னிட்டுக் கொண்டு தங்கள் சந்நிதியில் வரும்போது அது தங்களுக்குத் தெரியவரும்" என்று சொல்லிவிட்டு, எருதினிடத்திற்குப்போய் அங்கே தன்மனத்தில் மிகவும் விசனமிருப்பதாகத் தோற்றுவித்தது. அப்போது சஞ்சீவகன் "மித்திரா! சுகமா?" என்று கேட்கத் தமனகன் "சேவகனுக்குச் சுகமெங்கேயிருந்து வரும்? சம்பத்தும் விபத்துங் கூடவேயிருக்கின்றன, இராஜாவுக்குப் பிரியமா யாரிருக்கின்றார்கள்? யாசகன் சமமானத்தை யடைவானோ? இந்தக்காலமேது? தனக்கு மித்திரன் யார்? தன் வலி யெவ்வள வென் றெப்போதும் விசாரித்துக்கொண்டிருக்க வேண்டும்" என, இதைக்கேட்டுச் சஞ்சீவகன் "இப்படி யேன்சொல்லுகின்றாய்?" என, தமனகன் "இராஜகாரியத்தி லுண்டாகிய ஒஞ்சகத்தை மற்றொருவரோடு சொல்லலாமோ? இராஜாவிருந்தாற் கொல்லுவான், ஆனாலும் நீ யென் னம்பிக்கையாலே சிங்கத்தோடு சிநேகம் பண்ணினதனா லுனக்குச் சொல்லுகின்றேன், அந்தச் சிங்க முன்மேல் மிகவுங் கோபங்கொண்டு உன்னைக் கொன்று தன்னுடைய சேனைக்கெல்லாம் நல்ல விருந்திட நினைத்திருக்கின்றது" என்றுசொல்ல, அதைக் கேட்டவுடனே சஞ்சீவகன் வருத்தத்தோடு மாலோசித்துக் கொண்டிருந்தது. தமனகன், "வேறே யாலோசனை யென்ன? யாதொன்று சம்பவித்ததோ அதற்குத் தக்கதாக நடக்கவேண்டும்" எனச் சஞ்சீவகன் "நீ சொன்னதெல்லாஞ் சரிதான், உலகத்திலு மப்படியே யிருக்கின்றன, சாதாரணமாய ஸ்திரீகள் தூர்ச்சனர்களுக்கு வசமாயிருக்கின்றார்கள், இராஜாக்கள் துஷ்டர்களைப் பரிபாலிக்கின்றார்கள், துஷ்டனுடனே மிகவுஞ் சிநேகித்தா லவன் விபரீதமாக நினைக்கின்றான், குருடனுக்குக் கண்ணாடியைக் காண்பித்தாலுஞ் செவிடன்காதி லுபதேசித்தாலு மவர்கள் விபரீதமாகவே நினைப்பார்கள், துஷ்டனுமப்படியே விபரீதமாக நினைக்கின்றான், எப்படிச் சந்தனமரம் பாம்போடுகூடியிருக்குமோ, எவ்வாறு தாமரை முதலைகளோடு கூடியிருக்குமோ, அப்படியே பெரும்பாலும் இராஜாக்கள் துஷ்டர்களாற் சூழப்பட்டிருக்கின்றா

கள , ஆகையா லிபபடிபபடட பொல்லாஙகு நமக்கு நேரிடடது''
என, இதைககேடடுத தமனகன, " அநதச சிஙகததுககு வாயப பேசசுமாததிரந திததிபபேயல்லாமல மனம மிகவுங கடோரநதான , பூாவம பிரமா கடலைககடடபபதறகுக கபபலை யுணடாக்கினன, இருட டைப போககடிகக விளககைச சிருஷடிததான , யானையையடககு அஙகுசததைச சிருஷடிததான , துஷடாகளுடைய மனமடஙகுமபடி யாதொனறுஞ செயயாமறபோனன" என, இவையெல்லாங கேட டுச சஞசீவகன பெருமூசசெறிநது, " பெரிய பொலலாஙகு நேரிட டது , இதைத தபபிததுககொளள வெணககுச சாமாததியமிலலை , எமனுடையவாயி லகப்பட்டவ னெபபடித தபபிபபோவான ? எப படி யொரு குறறமு மிலலாத வொடடையைக காக முதலானவை கூடிக கொலைசெயதனவோ அபபடி வஞசனைபண்ணுகினற துஷ டாக ளொருவனிடததிற குற்றமிலலாதிருபபவும அவனைக கொலை செயகினறாகள" என, " அஃதெபபடி? சொலலவேணடும" என்று தமனகனகேடகச சஞசீவகன சொலலுகினறது —

" ஒரு காட்டில மதோற்கடனெனனு மொருசிஙகம நரியை யும புலியையுங காககையையுந தனககு மநதிரிகளாக வைததுக கொணடு அரசாணடுவநதகாலததில ஒருநாள அநதககாடடி லொட டக மொனறு வழிதபபிவரககணடு, மநதிரியாகிய காககை ' நீயார ?' எனறு கேட்க, அநத வொட்டகம 'நான வழிதபபி வநதுவிடடேன' எனறு சொலலிறறு, காககை அதனை யிட்டுககொணடுபோயச் சிங் கததி னிடததில விட்டு, நடநத காரியததைச சொலல, அதைச சிஙகஙகேடடு ஓட்டகததைப பாாததுப 'பயபபடாதே, நமமுடைய மநதிரிகளுடனே நீயுமொரு மநதிரியா யிரு' எனறு அதற்கு அபயங கொடுதது, மநதானககனெனறு பெயரிட்டு, அதைத தனனிடத தில வைததுககொணடது இபபடி வெகுகாலஞ செலலுகையில ஒருநாட சிஙகததுக்குச சரீரம அசௌககியமா யிருநதபடியினால அது தன மூன்றுமநதிரிகளையு மழைப்பித்து 'இன்றைக் கெம்மா லிரை சமபாதிககக் கூடாது , நீஙகள் போயெனக்கு ஏதாவதிரை கொண்டுவர வேணடும் ; பிறகு நான தினறு மிகுந்ததை நீஙகள்

தினலாம்' என, இம்மூன்றுஞ் சிங்கத்தின் கட்டளைப்படி யாகக் காட்டிற்போ யிரைதேடிப்பார்த்தும் அகப்படாமையால் அப்போது தங்களோடு கூடவிருந்த மந்தானகனைத் தூரத்திற் போம்படி யொரு வேலையிட்டுக் காகம் மற்றை யிருவரையும் பார்த்து 'இன்றைக்கு நாம் மந்தானகனைக் கொல்லுவோம், புல்லுந் தழையுந் தின்னுகிறவனால் நமக்குப் பிரயோசன மென்னே?' என, மற்ற இரண்டுஞ் 'சரிதான், அவனுக்கு நம்முடைய இராஜா அபயங் கொடுத்திருக்கின்றதனா லவனை நாமெப்படிக் கொல்லலாம்? கூடாது' எனக் காகம் 'நாமின்றைக்குச் சிங்கத்தினைக் கையால் தப்பாமல் மரணமடைவோம், பசியெடுத்தாற் றாயும் பிள்ளையை விட்டுவிடுகின்றாள், பாம்புந் தானிட்ட முட்டைகளைக் குடிக்கின்றது, ஆகையாற் பசியாற் பீடிக்கப்படுகின்றவன் எந்தப் பாதகந்தான் பண்ணமாட்டான்? இஃது உங்களுக்குத் தெரியவில்லையோ?' என்று சொல்லி யுடனே சிங்கத்தண்டைபோய்க் காகம் 'சுவாமீ! இன்றைக் கெதுவுங் கிடைக்கவில்லை' என, 'இதற்கென்ன வுபாயம் பண்ணலாம்?' என்று சிங்கங்கேட்கக் காகம் 'தங்கள் சுவாதீனத்தி லிரையிருக்கையில் தாங்கள் வேறே யாலோசிப்பானேன்? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்தேடலாமோ?' எனச் சிங்கம், 'எம்மிடத்து ஆகாரமெங்கே யிருக்கின்றது?' எனக் காகம் 'மந்தானகனென்னு மொட்டை யிருக்கின்றதே' என, இதைக்கேட்டுச் சிங்கம் பூமியைக் கையாற்றொட்டுச் 'சிவசிவா' வெனக் காதின்மேற் கையை வைத்து 'நானவனுக்கு அபயங்கொடுத்திருக்கையில் நீங்களிப்படி விபரீத வார்த்தை சொல்லலாமோ? அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடலாமோ? பசு, பூமி, தானிய மிவற்றின் தானத்தைக் காட்டிலும் அபயதான மதிகம்; அசுவமேத புண்ணியத்தைக் காட்டிலு மிந்தப் புண்ணிய மதிகமென்று சாஸ்திரமு மிருக்கின்றதே' எனக் கேட்டுக் காகம் 'ஐயா! என்னிவ்வொரு விண்ணப்பத்தையுங் கேட்டருளும், ஒரு குலத்துக்காக வொருவனை விட்டு விடலாம், ஒரு கிராம ரக்ஷணைக்காக வொரு குடும்பத்தைத் துறக்கலாம், ஒரு தேச பாலனத்தின் பொருட்டு ஒரு கிராமத்தைக் கைவிடலாம், தன்

னி ீதத்தம பூமியை விடலாம, ஆகையா லித்தபபனறு, ஆகினு மவனைத் தாஙகள் கொலலவேணடாம, நாஙகளே கொலலுவோம, இலலாவிட்டா லவனே சாவ வுடன்படடு எனனைக கொலலுஙக ளெனபான, அபபோது நாஙகள கொலலுவோம்' என்று சொல லச சிஙகஞ் சுமமா விருநதது பிறகு காகம அதுவே கட்டளையாக நினைததுக கொணடுபோய, மறறை மூனறையு மிட்டுககொணடு சிஙகததின அருகிலிருநது 'சுவாமீ! இனறைககொனறும ஆகாரம அகபபடவிலலை, அதனால தாஙகள இனறைககுப படடினி யிருகக லாயிறறு, அபபடியிராம லெனனைப புசிககலாம்' எனச சிஙகம 'நீ யெவவளவு? உனனை யுணடதனு லெனபசி தீருமோ? உனனுட லெனககடைவாயப பலலுககேனும போதுமோ?" எனறு கேடக, நரி 'அபபடியானு லெனனையு தினனும்' எனறு நிறக, 'நீயு மப படித்தான, நீ யதிகமலலை' எனறு மறுகக, புலி 'இவவிருவரினும நான பெருததிருககினறதனு லெனனைப பகஷிததுப பசிதீரும்' என, சிஙகம 'நீதான எனக கெவவள விரை? உனனைப பெரிதாக நினைததுக கொணடிருககினருயோ?" எனறு சொலல, ஒட்டகம இதைபபாரதது 'நானெலலாரையுங காட்டிலும பெருததிருகக விலலையோ? சிததமானு லெனனைக கொலலலாம்' என, இதைக கேடடவுடனே புலியும நரியும பாயநது விழுநது அநதக்ஷணமே, ஐயோ! அதைக கொனறு எலலாம புசிததன ஆகையா லெஙகே மிகவுஙகீழக ளிருக்குமோ அஙகே சுகமிராது பிராணனுககு நா சம வருமென்றே நினைகக வேணடும இவவிடததிலு மபபடியே யிருககினறது துஷடாகள கையிலகபபடடுச சும்மா இறப்பதைககா ட்டிலுஞ் சணடைசெயவதே யோககியம ஒருவன சணடைமூள யிற செததாறசொாககமடைகினருன சததுருவைசசயிததா விராச சியமடைகினருன ஆதலாற சூராகளுக்குச சாவும பிழைப்புஞ் சமா னம்" எனறது. அதைககேடடுத தமனகன "பகைவாகளுடைய பராககிரமததை யறியாமல எவன் பகைததுக்கொளளுகினறுனே அவன சமுததிரஞ சிட்டுககுருவியினு லெபபடி அவமான மடை ந்ததோ அப்படியே யவமானமடைவான" என அபபோது "அஃ

தெப்படி ?" என்று சஞ்சீவகன் கேட்கத் தமனகன் சொல்லுகின்றது—

"சமுத்திரக்கரையில் இரண்டுசிட்டுக்கள் ஆணும்பெண்ணுமாய் ஒரு செடியின்கீழ்க் கூடுகட்டிக்கொண் டிருக்கும்போது பெட்டை ஆண்பறவையைப்பார்த்து 'எங்கேமுட்டையிடலாம்'' என்றுகேட்க ஆண் 'இது நல்லவிடம்' என்று சொல்லப் பெண் 'இந்தக் கடற் கரையி லொருவேளை யபாயம்நேரிடும்' என, ஆண்சிட்டு, 'சமுத்தி ரத்திற்கு என்னுடனே பகைத்துக் கொள்ளச் சாமர்த்திய மில்லை' யென, பெண் 'உனக்கும் சமுத்திரத்திற்கும் வெகு தாரதம்மிய மிருக்கின்றதே, எவன் தன் வலியும் பிறன்வலியும் பார்க்கின்றதில் லையோ அவன் விபத்தை யடைவான், எவன் பார்க்கின்றானோ அவன் சுகமடைவான் மேலும் தனக்கிதம் பண்ணுகின்ற மித்திரன் பேச்சைக் கேளாதவன் ஆமை யெப்படிக் கழியைவிட்டு மரண மடைந்ததோ அப்படியே மரணமடைவான்' என, ஆண் 'அதெப் படி? பெண்ணே! சொல்' என்ப் பெட்டைக்குருவி சொல்லுகின்றது

"விகட சங்கடங்கள் என்று இரண்டன்னமும் கம்புக்கிரீவ னென்று மாமையுஞ் சிநேகமா பொருகுளத்தில் வாழ்ந்து கொண் டிருக்கையில் அன்னங்கள் 'இப்போ திங்கே மழைபெய்யாமையாற் குளம் வறறிப்போமாகையால் இனி வேறொரு குளத்திற் போய்ச் சேர்வது யோக்கிய'மென்று நினைத்து 'இதை நம்முடைய சிநேகித னுக்குச் சொல்லவேண்டு'மென்று ஆலோசித்து அப்படியே யதற்குச் சொல்லும்போது, கம்புக்கிரீவன் 'நீங்கள் செப்பட்டையினாற் பறந்து போவீர்கள், நான் வேறோரிடத்திற் கெப்படிப்போவேன் ?' என விகடசங்கடங்கள் 'எங்கள் வார்த்தையில் நம்பிக்கைவைத்து ஸ்திர மாயிருப்பையானா லுன்னையுங் கொண்டுபோவோம், கொண்டு போ கையில் வழியில் ஏதொன்றும் பேசாமலிருந்தாற் போகக்கூடும்' என் றுசொல்லி, ஒரு கழிகொண்டுவந்து ஆமையைப்பார்த்து 'இந்தக்கழி யைப்பல்லினாலே பலமாய்க்கடித்துப் பிடித்துக்கொள்ளு; விட்டு விடாதே, நாங்களிருவரு மிதை யிருபுறத்திலும் மூக்கார் கௌவி

கொண்டு ஆகாயமார்க்கமாய்ப் போகின்றோம்' என்று சொல்லி அந்தக்கொம்பை யிரண்டும் பற்றிக்கொண்டு எழும்பிப் பறந்துபோயின. இதனை யொரு பட்டணத்துச் சனங்கள் பார்த்து அதிசயித்து நகைத்து எல்லாரு மொருமிக்க 'இதென்னே? ஒருகழியை யிரண்டு பறவைகள் தூக்கிக்கொண்டு அதை யாமையாற் பிடிப்பித்துக்கொண்டு போகின்றன'வென்று இப்படிப் பேரிரைச்சலிட்டுப் பேசினார்கள். அதைக்கேட்டுக் கம்புக்கிரீவன் 'இவ்விரைச்சல் எங்கிருந்துண்டாகின்றது?' என்று சொல்வதற்கு வாய்திறந்தவுடனே கழியினின்றும் விடுபட்டுப் பூமியில்விழுந்தது. அப்போதங்கே யிருந்த புலாற்றின்பவர்கள் உடனே யதைக் கொன்று தின்றார்கள். ஆகையால் தனக்கிதம் பண்ணுகின்றவர்கள் பேச்சை யசட்டைபண்ணலாகாது. மேலும் யாதொரு காரியமும் நேரிடுவதற்கு முன்னேதானே யாலோசிக்கின்றவனும், வருகின்றபோதே யாராய்கின்றவனுஞ் சுகமடைவார்கள். இதைவிட்டு 'யாதொன்று வரத்தக்கதோ அது வரட்டு'மென்று எவன் சொல்லுகின்றானோ அவன் வந்தபின் காப்போனென்னு மீனைப்போல நாசமடைவான்?" என்ச் சேவல் "அஃதெப்படி" யென்பப் பெட்டைச்சிட்டுச்சொல்லுகின்றது —

"ஒரு பெரிய குளத்தில் **வருமுன் காப்போ**னென்றும், **வருங்காற் காப்போ**னென்றும், **வந்தபின் காப்போ**னென்றும் பெயரியமூன்று மீன்கள் அநேகநாளாய் வாழ்ந்துகொண் டிருக்குநாளில் ஒருநாள் வலைஞர்கள்வந்து 'இதிற் றண்ணீர் கொஞ்சமா யிருக்கின்றதாகையால் நாளைக்கு வந்து இதிலிருக்கின்ற மீன்களை யெல்லாம் பிடிப்போ' மென்று பேசிக்கொண்டதை வருமுன் காப்போன் கேட்டுத்தன் சிநேகிதரிடத்திற்குப்போய், 'நா மிவ்விடம் விட்டுச் சீக்கிரமாகப் புறப்படவேண்டும், இனி யிங்கே நிமிஷநேரமு மிருக்க லாகாது' என், இதைக்கேட்டு வருங்காற் காப்போன் 'நமக்கு விபத்து வரும்போது பார்த்துக் கொள்ளுவோம், காரிய நேரிடும்போது அதற்குத் தக்கதாகப் புத்தி யுண்டாகும்' என்ப, பிறகு வந்தபின் காப்போன் 'தன்னிடத்தை விட்டுவிடுகிறதுதான் மூடத்தனம், எது வரத்தக்க

தோ அது வரவே வரும், யாதொன்று வரத்தகாததோ அது நாம் வருந்தியழைத்தாலும் வாராது, ஆதலால் நான் வரமாட்டேன்' என்று சொல்லி அந்தக் குளத்திலேயே யிருந்தது. பிறகு வருமுன் காப்போன் வேற்றிடத்துக்குப் போய் விட்டது. மறுநாளுதயத்திற் செம்படவர் வந்து வலையெறிந்து மீன்களைப்பிடித்தார்கள். அதில் வருங்காற்காப்போனகப்பட்டுச் செத்தாற்போற் பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்து இது செத்ததென்றெண்ணிக்கொண்டு செம்படவன் அதைக் கரைமேற் போட்டுவைத்தான். இதற்குள்ளே அஃது அவன் கண்ணுக்குத் தப்பித் தண்ணீரிற் புகுந்தொளித்துக்கொண்டது. பிறகு வந்தபின் காப்போன் வலைக்குள் அகப்பட்டு இப்போதென்ன செய்யலாமென் றங்குமிங்குமோட இதைச் செம்படவன் கண்டு, தடியா லடித்துக் கொன்றான். மற்றை யிரண்டுஞ் சுகமடைந்தன. ஆகையா லெதையு மாலோசித்துச் செய்யவேண்டும்" என்று சொல்லிப் பிறகு புருஷன் சொற்படி யங்கே தானே முட்டையிட்டது. அப்பொழுது சமுத்திரம் அதன் வல்லமையை யறியாமல் முட்டைகளை யடித்துக் கொண்டு போயிற்று. சிட்டு அதைப்பார்த்து வெகு துக்கமாய்ச் சேவலுடன் 'சுவாமீ! தங்களுக்குப் பெரிய சங்கடம் வந்தது, முட்டைகளைச் சமுத்திரங் கொண்டு போயிற்று, இப்போதென்ன செய்யலாம்?" எனச் சேவல் 'நீ பயப்படாதே நான் முட்டைகளைக் கொண்டுவருவேன், என் திராணியைப் பார்' என்று சொல்லி யெல்லாப் பறவைகளையுங் கூட்டிக்கொண்டு கருடனைச் சரண மடைந்தது. கருடன் அதை விஷ்ணுவுக்கு அறிவித்து 'அப்பறவை மிகவும் வருத்தப்படுகின்றது, ஆகையா லதன் முட்டைகளைக் கொடுபிக்கவேண்டும்' என, விஷ்ணு சமுத்திரத்தைப் பார்த்து, 'அதன் முட்டைகளைச் சீக்கிரமாய்க் கொடு'வென்று கட்டளை யிட்டவுடனே, சமுத்திரம் முட்டைகளைக் கொண்டுவந்து கொடுத்தது. ஆகையாற் சத்துருக்களுடைய பராக்கிரம மறியாமற் பகைத்துக்கொள்ளலாகாது. அந்தச் சிங்கத்திற்கு அகங்காரத்தினாற் றெரியவில்லை" எனக் கேட்டுச் சஞ்சீவகன் தமனகனைப்பார்த்து "நல்லது அந்தச் சிங்கத்தின் சண்டைக்குறிப்பு எப்படி யிருக்கும்? சொல்"

எனத் தமனகன் "எப்போது அவன் காதுகளை நெறித்துக்கொண்டு வாலைத் தூக்குவானோ அப்போது கொல்ல நினைத்தானென்றறிய வேண்டும், அக்காலத்தி லப்படியே நீயு மவனுக்கு முன்னே யிருக்க வேண்டும், சுத்தவீரனாகிய வுனக்குத் தெரியாதா? எல்லாந் தெரிந்த வர்களுக்குச் சொல்வானேன்?" எனச் சொல்லி விட்டுத் தமனகன் மறுபடி கரடகனிடத்திற்குப் போயிற்று. அப்போது கரடகன் "என்னாயிற்று? சொல்" எனத் தமனகன் "காரிய முடிந்தது, இருவருடைய சிநேகத்தின் வாயிலும் மண் விழுந்தது, இப்போது நான் சிங்கத்தின் கோபக்குறி யிப்படி யிருக்குமென்று சஞ்சீவகனுக்குச் சொன்னபடியே செய்விக்கின்றேன்" என்று பிங்களனிடத்திற்குப் போய அப்படியே யதைச் செய்வித்தது. பிறகு சஞ்சீவகன் சிங்கமிருக்கு மிடத்திற்குவந்து பார்க்கும்போது, தனக்குத் தமனகன் முன் சொன்னபடியே யிருக்கக் கண்டு, மிகவும் வியசனமடைந்து, பராக்கிரமத்தினாலேயே பிராணனை விடவேண்டு மென்று நிச்சயித்து யுத்தத்திற்கு ஆரம்பிக்கவே இரண்டுக்கும் பெரிய சண்டை விளைந்தது. கரடகன் அதைப்பார்த்துத் "தமனகா! துஷ்டா! உன் சோகையால் இராஜாவுக்குச் சிநேகனுக்கும் சண்டையுண்டாயிற்று, இராஜநீதியிற் சாமதானபேத தண்டமென்னு நான்குபாயங்களிருக்கின்றன, அவைகளிற் சாமமென்னு முபாயம் முக்கியமானது, அச்சாற் காரியசித்தி யுண்டானது போல மற்றவைகளா லுண்டாகாது, பகையிருந்தாலுஞ் சாம வுபாயத்தாலேயே போம், இப்படி யிருக்கையில் நீ இராஜாவைப் பெரிய பொல்லாப்பில் வீழ்வித்தாய், இராஜாக்களிற் சிலர் ஈனர்களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கடமடைகின்றார்கள், ஆகையாற் குணவந்தர்களுடைய கூட்டுறவு இராஜாக்களுக் கிருக்கவேண்டும். கபடியாக விருக்கின்ற பிரதானி புத்திசாலியானாலும் அவனொருபோதும் இராஜாவண்டையி லிருக்கலாகாது; மற்றுந் தானே சம்பத்தை யடைய வேண்டுமென்று நினைத்து, இராஜாவினிடத்தில் வேறொருவன் சேரலாகாதென நிச்சிப்பவனும் இராஜாவுக்கு உபயோகியாகான், பலபெயர் சமர்த்தர்கள் இராஜாவினிடத்தி லிருந்தால், இராஜா பிரகாசிப்பான், ஆகைக

